[3rd November 1958

(*b*) what are the prisons in which industrial or craft training is imparted to convicts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Six discharged prisoners are employed in the factories.

| Name of the Factory or Workshop. | Number of Discharged Prisoners employed. |
|---|---|
| (1) Stationery and Printing Department ... | 2 |
| (2) Transport and Machinery (Highways) Workshop, Pudukkottai ... ... | 1 |
| (3) Cinchona Department (The Nilgiris) ... | 3 |

(*b*) Central Jails at Tiruchirappalli, Cuddalore, Coimbatore, Madurai, Vellore, Madras and Salem; State Jail for Women, Vellore, District Jail, Pudukkottai; Borstal School, Palayamcottai; and the Special Sub-Jail, Salem.

SRI P. G. MANICKAM: குற்றம் செய்து சிறைசென்று திரும்புகிறவர்களில் பெரும்பாலோர் ஏழைகள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகையால் அவர்கள் தங்களுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்று சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டால், அவர்களுக்குச் சர்க்கார் தொழிற்சாலைகளில் வேலை கொடுக்க அரசாங்கம் உத்தேசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த முறையில் தான் அவர்கள், நான் இப்போது குறிப்பிட்ட சர்க்கார் தொழிற்சாலைகளில் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR: சிறையிலிருந்து விடுதலையாகிய கைதிகளில் பெரு ாலோர் திரும்பவும் சிறைக்குச் செல்லவே விரும்புகிறார்கள் என்பது உண்மையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது கனம் அங்கத்தினருக்குத் தெரிந்திருக்கலாம், எனக்குத் தெரியாது.

SRI P. S. SANTHANAM: திருடுவது போன்ற குற்றங்களைச் செய்து சிறை சென்று திரும்பியவர்களுக்கு, சிறையில் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட தொழில்களையே சர்க்கார் தொழிற்சாலைகளில் கொடுத்தால், அவர்கள் மீண்டும் திருடாமல் அந்தத் தொழில்களைச் செய்து கொண்டிருப்பார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சிறையில் அவர்கள் கற்றுக்கொள்ளும் தொழில்கள் அவர்கள் விடுதலையான பிறகு வாழ்க்கை நடத்துவதற்கு அவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்பதும், அதற்கேற்ற முறையிலேயே சர்க்கார் தொழிற்சாலைகளிலும் வேறு தொழிற்சாலைகளிலும் அவர்கள் வேலைக்கு அமர்த்தப்பட வேண்டுமென்பதும்தான் அரசாங்கத்தின் எண்ணம்.

### *Teachers of Salem and Tiruchirappalli District Boards*

* 814 *Q*.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) when the payment of salaries for the months of January, February and March, 1958 was made to the teachers under the District Boards of Tiruchirappalli and Salem respectively; and

3rd Novembe 1958]

(*b*) if there has been any delay what is the cause for the same?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

*Award of Medals to Harijan students*

* 815 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of Harijan boys and girls of the South Arcot district who were awarded Silver medals for securing high marks in the S.S.L.C. Examinations held in 1956–57 and 1957–58; and

(*b*) the total value of those medals?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No medals have been awarded during these years.

(*b*) Does not arise.

* **816** *Q.*—SRI **P. G. MANICKAM :** கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) **1957–58**-ஆம் வருஷத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்தலில் உயர்ந்த பட்ச மார்க்குகள் பெற்ற எத்தனை சென்னை மாகாண ஹரிஜன மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் தங்கம், வெள்ளி பதக்கங்கள் பரிசாக வழங்கப்பட்டன ?

(ஆ) **1958–59**-ல் மேற்கண்ட பரிசுகள் வழங்குவதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No medals have been distributed so far. Particulars have been called for from Collectors and on receipt of details the Director of Harijan Welfare will arrange to distribute the medals.

(*b*) Rs. 1,560.

**SRI M. JAGANNATHAN :** இந்த வருடங்களில் மெடல்கள் ஏன் வழங்கப்படவில்லை ?

**THE HON SRI P. KAKKAN :** ஜில்லா கலெக்டர்களிடம் விவரங்கள் கேட்டிருக்கிறோம். விவரங்கள் வந்த பிறகு மெடல்கள் கொடுக்கப்படும்.

**SRI P. G. MANICKAM :** **1958–59**-ம் ஆண்டிற்குப் பரிசுகள் வழங்குவதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பணத் தொகையானது இதே வருஷம் செலவழிக்கப்பட்டு பரிசுகள் வழங்கப்படுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**THE HON. SRI P. KAKKAN : 1956–57, 1957–58** ஆகிய ஆண்டுகளுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகள் இன்னும் செலவழிக்கப்படவில்லை. அந்தத் தொகைகளையே இந்த வருஷத்திற்குள் செலவழிக்கலாமா அல்லது இந்த வருஷத்திற்குப் பிறகும் செலவழிக்கலாமா என்பது பரிசீலனையில் இருந்து வருகிறது.

**SRI K. B. S. MANI :** இந்தப் பரிசுகள் **1956**-லிருந்து கொடுக்கப்படாமலிருப்பதாகத் தெரிகிறது. இதன் விளைவாகச் சர்க்கார் எந்த நோக்கத்துடன் இந்தத் திட்டத்தை ஆரம்பித்தார்களோ அந்த நோக்கம் வெற்றியடையாமலிருக்கிறது. பரிசுகள் கொடுக்கப்படாமலிருப்பது, ஜில்லாக் கலெக்டர்களின் தவறினாலா அல்லது அரசாங்கத்தின் அலட்சியத்தாலா ?

---

[a] **Printed as Appendix VII on page 480 infra.**